உ

சிவமயம்

# தமிழன்னை தசாங்கம்.




பண்டித

இராம. சோமசுந்தரம்

இயற்றியது

தமிழகம் :: காரைக்குடி.

உ

சிவமயம்

# தமிழன்னை தசாங்கம்.

பண்டித

இராம. சோமசுந்தரம்

இயற்றியது




தமிழகம் ∴ காரைக்குடி.

உ

சிவமயம்

# தமிழன்னை தசாங்கம் உரிமையுரைப் பாடல்கள்.



திருவாலுஞ் சொல்பயிலுந் திறத்தாலும்
மதியாலுஞ் சிறந்து தோன்றிப்
பொருவார்கள் மனமமையப் புகல்நீதி
முறையாலும் புகழ்ந்து வாழ்த்த
ஒருவாநல் வளமிகுந்த வயர்காரைக்
குடிநகரில் உயர்ந்தோர் போற்றப்
பெருமாண்பு மிகமருவப் பெருவணிகர்
குடிமுதலிற் பிறந்த தூயோன்.

இப்பெரிய நிலவுலகம் இனிதியங்கக்
காத்தருளும் இறைவன் தன்னை
ஒப்பரிய திருமாலா வுரைப்பார்கள்
உரையதனை யொக்கும் பண்பால்
அப்பெரிய திருநாரா யணன்பெயரே
சிறப்பாக அமையப் பெற்றோன்
செப்பரிய குணநலத்தால் தன்னடைந்தார்
நலமுறவே செய்யுஞ் சிலன்.

அன்னையெனை யீன்றகன்ற வன்றுமுதல்
அன்னையினும் அன்பாற் காத்து.
நன்மனமா ரின்மொழிசேர் நற்செயல்கள்
செய்பழக்கம் நாளுந் தந்து
மன்னுசுவைத் தமிழமுதம் மகிழ்ந்தூட்டி
மாட்சிபெற வளர்த்த செம்மல்
லின்செயலை மறவாதே யெந்நாளும்
நினைப்பதற்கென் எண்ணங் கொண்டு.

இலக்குணர்த்தும் மணிமொழியா ரிந்ததிரு
வாசகத்தை எவருங் கற்க
இலக்கியந்தேர் கலையுலகம் இயலிசையாய்
நாடகத்தால் ஏற்கும் வண்ணம்
இலக்கணத்தின் விதிவழியே எழுத்தாய்ந்து
சொற்பொருளை எளிதிற் காட்டிப்
புலக்கணகம் நனிவிரும்பப் பொருள்பொழியும்
நுண்ணறிவாம் புனலார் கொண்டல்.

தமிழ்ப்புலவன் கதிரேசன் தனிப்பெயரார்
கழகமதிற் றன்னே ரில்லாத்
தமிழ்க்கல்வி தகுநெறியிற் றருமாசி
லாமணியாம் சான்றேன் தன்பாற்
றமிழ்பயிலும் மாணவனுய்ச் சார்ந்தங்கே
தமிழணங்கின் தன்மை கண்டு
தமிழ்முழங்கும் அக்கழகத் தமிழ்த்திருநாட்
பேரவையிற் றக்கோர் முன்னே.

அன்னைதமிழ்ப் பேரரசிக் கணிந்ததமிழ்த்
தசாங்கமெனும் அழகார் நூலை
நன்னர்மொழி பொறைவாய்மை நல்லொழுக்கம்
உயரறிவு நண்ணுஞ் செல்வன்
இன்னபெருந் தகையாளற் கியான்பேரன்
புடனேயிவ் வினிய நாளில்
மன்னுரிமை பெறவழங்கி வாழ்கவென
உளமகிழ்ந்து வாழ்த்து வேனே.



# பதிப்புரை

தசாங்கமென்பது முன்னோர் வகுத்த தமிழ்ப் பிரபந்தங்களில் ஒன்று. அஃது அரசனுக்குரிய மலை, நதி, நாடு, நகர், மாலை, குதிரை, யானை, கொடி, முரசு, செங்கோல், என்ற பத்துறுப்புக் களைப் பத்து நேரிசை வெண்பாக்களால் அலங்கார மாகப் பாடப்பெறுவதாகும்.

கதிரேசன் கழகத்தில் பண்டிதத் தேர்வுக்குப் படிக்குங்கால் தமிழ் மொழியை அரசியாக உருவ கித்து அதற்குரிய பத்துறுப்புக்களையும் அமைத் துப் பாடவேண்டும் என்ற நினைவு எழுந்தது. அந் நினைவின் முதிர்ச்சியினால் இந்நூலாக்கப் பெற்று வெளி வருகின்றது.

இந்நூலைச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை யவர்கள் தலைமையில் நடைபெற்ற கதிரேசன் கழக ஐந்தாவதாண்டு நிறைவு விழாவில் படித்து அரங் கேற்றினேன்.

எனக்குத் தமிழறிவு ஊட்டி என்னைத் தமிழ் மகனாக்கிய பண்டித திரு. ப. மாசிலாமணித் தேசி கரவர்கட்கும், இந்நூலை அரங்கேற்ற வாய்ப்பளித்த கதிரேசன் கழகத்தாருக்கும் இந்நூற்கு மனமு வந்து முன்னுரை எழுதித் தந்த மகாமகோபாத்தி யாய, பண்டிதமணி, திரு. மு. கதிரேசச் செட்டியா ரவர்கட்கும், வாழ்த்துரை நல்கிய திரு. சொ. முரு கப்பா அவர்கட்கும், சாற்றுக்கவி பாடித் தந்த புலவர் பெருமக்களுக்கும் என் உளநிறைந்த நன்றி யையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளு கின்றேன்.

சர்வதாரி<br>பங்குனி<br>௰௬.

இராம. சோமசுந்தரன்,<br>காரைக்குடி.

# முன்னுரை

மகிபாலன்பட்டி, மகாமகோபாத்தியாய, பண்டிதமணி
உயர்திரு மு. கதிரேசச் செட்டியாரவர்கள் எழுதியது.

காரைக்குடி, பண்டிதர், திரு பழ. தெ. ராம. சோமசுந்தரனார் இயற்றிய தமிழன்னை தசாங்கத்துச் செய்யுட்களைப் படித்துப்பார்த்தேன். வெண்பாக்களில் செப்பலோசை நயம் நன்கு வாய்ந்துள்ளது. சொல்லினிமை பொருளினிமைகள் சிறந்து காணப்படுகின்றன. தசாங்கங்கள் இன்னவென்று கூறியிருத்தல் பெரும்பாலும் பொருத்தமாகவுள்ளது. திரு. சோமசுந்தரனாருடைய தமிழ்ப் பயிற்சியும் கவிபாடும் ஆற்றலும் இதனால் புலப்பட்டு உள்ளத்தை இன்புறுத்துகின்றன. ஆண்டில் இளைஞராகிய இக்கவிஞர் நெடுங்காலமிருந்து தமிழ்ப்பணி செய்து இன்புற்று வாழும் வண்ணம் தமிழ்த்தெய்வம் திருவருள் புரிகவென வேண்டுகின்றேன்.

மகிபாலன்பட்டி
9—11—1948

மு. கதிரேசன்.

7963

# வாழ்த்துரை

'குமரன்' ஆசிரியர். திரு. சொ முருகப்பா அவர்கள் எழுதியது

செந்தமிழ்த் தாயன்பால், இளம்புலவர் இராம. சோமசுந்தரம் அவர்கள் பாடியுள்ள 'தமிழன்னை தசாங்கம்' வரவேற்புக்குரியது. உலகெலாம் போற்ற ஒருதனி அரசாண்ட செந்தமிழன்னையின் இன்றைய நிலை இரங்குதற் கிலக்காகி நிற்கிறது. இதனைமாற்றி மணிமுடி சூட்டிக் கண்டுமகிழ விழை யும் இத்தசாங்கம் நன்ருக அமைந்திருக்கிறது. சோமசுந்தரம் நல்லவாக்கு வளம்பெற்றிருக்கிருர். அவருடைய தமிழார்வம் பெருகித் தமிழன்னைக்குப் பணிபல புரிவதாக.

மகளிர் இல்லம்
அமராவதி புதூர்.

சொ. முருகப்பன்,
ஆசிரியர் "குமரன்"

## சாற்றுக்கவி

—௳—

மகிபாலன்பட்டி, மகாமகோபாத்தியாய, பண்டிதமணி.
**திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள் பாடியது :—**

ஆன்ற தமிழ்த்தாய்க் கழகார் தசாங்கவியல்
என்றசுவைப் பாவால் இனிதுரைத்தான்—
[தோன்று புகழ்க்
காரைநகர்ச் செல்வன் கவிசோம சுந்தரனும்
சீருடையான் வாழ்க சிறந்து.

---

காரைக்குடி, ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் உயர்தரப்
பள்ளித் தலைமைத் தமிழாசிரியர், பண்டித, திரு. ப.
**மாசிலாமணித் தேசிகரவர்கள் பாடியன :—**

பாருயர்சொல் என்னப் படைப்பிற் பழங்குடியாம்
தாருயர்தோள் வென்றித் தமிழ்மன்னர்—சேரர்
செழியர் வளவராற் சீர்த்த இறைமை
மொழியுயர்த னிச்செம் மொழி.

மொழிமூலம் சார்பொலிகள் முப்பத்தொன்றாகச்
செழிதமிழ்பல் லூழிதிகழ் சீர்காண்—வழிவந்த
தென்னன் மதுரையினும் சென்னபட்டி னம்நகராம்
என்னதமிழ் போற்றூர்க் கிறை.

இறைமைக் கனியென்று மிரைந் துறப்பும்
இறைவி தமிழ்த்தாய்க் கிசைவ—திறையாகச்
சோமசுந்த ரன்வழங்கு தொல்தமிழ்த்த சாங்கமுறை
தாமனத்தர் யாருமேற்ப து.

---

காரைக்குடி, ஆயுர்வேத வைத்தியரும்
தமிழறிஞருமான திரு.த. கி. வேங்கடசாமி நாயுடு அவர்கள்
பாடியது.

பத்தங்கம் பைந்தமிழ்க்குப் பார்முழுதும் பாவலர்கள்
சித்தங்கங் கொண்டுவப்பச் செப்பினன்—தத்தங்கம்
நந்தவளஞ் சால்காரை நன்னகர்வா ழுஞ்சோம
சுந்தரன்சொற் செல்வன் சுகன்.

---

திண்டுக்கல், தமிழ்க்கோயில், வித்துவான் திரு. ரா
முருகேசக் கவிராயர் அவர்கள் பாடியது.

தாரார் தமிழன்னை தன்மேற் றசாங்கமெனும்
சீரார் பனுவல் சிறப்பித்தான்— நேர்பணியில்
தாமசந்த ராத தனவணிகப் பேரன்பன்
சோமசுந்த ரன்மனம் வைத் து.

---

மதுரை, செயின்ட்மேரி உயர்தரப்பள்ளித் தலைமைத்
தமிழாசிரியர் பண்டித திரு. அ. முத்துசாமி பிள்ளை
அவர்கள் பாடியன.

பண்டைப் பெரும்புலவர் பாராட்டிப் பாடியசீர்த்
தண்டமிழ்த் தாய்க்குத் தசாங்கப்பேர்—கொண்டதொரு
தாமம் புனைந்தான் தருசோம சுந்தர
நாமம் புனைந்தகவி ஞன்.

பல்வித் தைகளும் பயின்றவர் போற்றும் பசுந்தமிழாம்
செல்விக் கினிய தசாங்கப் பெயர்த்தொடை செய்
[தணிந்தான்
கல்விக் களஞ்சிய மாகிய காரைக் கவின்பதிவாழ்
நல்விற் பனர்கள் புகழ்சோம சுந்தர நாவலனே.

---

காரைக்குடி, வித்துவான் திரு. அரு. சிவ. ராம. நா. **கோவிந்தன் செட்டியாரவர்கள் பாடியது.**

மன்னியலுக் கேற்றவண்ணம் மன்னியுயர் செம்மொழியாங்
கன்னித் தமிழ்த்தசாங் கங்கொள்வ—துன்னிமகிழ்
சோமசுந்த ரனபகர்ந்த தொல்தமிழி னுரைரெழினு
டேமமுறு சொற்பாட் டினிது.

---

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தலைமைத் தமிழ்ச் சொற்பொழிவாளர், பண்டித, வித்துவான் திரு. லெ. ப. கரு. **இராமநாதன் செட்டியாரவர்கள் பாடியது.**

சுவைசால் தசாங்கமதைத் தூயதமி ழன்னைக்
கவையோர் புகழ அமைத்தான்—நவைதீர்நூல்
பற்பலகற் றோன்சோம சுந்தரப்பேர்ப் பண்புடையோன்
எற்கினியோன் வாழ்கபல்லாண் டே.

---

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ச் சொற்பொழிவாளர் வித்துவான் திரு. மு. **அருணாசலம் பிள்ளை அவர்கள் பாடியது.**

செந்தமிழ்த் தாய்க்குச் சிறந்தவி ரைந்துறுப்பால்
நந்தாத பாமாலை நல்கினன்—பைந்தமிழின்
சோலைசெறி காரைநகர்ச் சோமசுந்த ரன்புலமைச்
சீலமுடை யானன்கு தேர்ந்து.

---

உ

சிவமயம்

# தமிழுன்னை தசாங்கம்.

### இறைவணக்கம்

ஆதித் தமிழரசிக் காதித் தசாங்கவணி
ஆதிமுதற் பாவால் அமைத்திடமுன—ஆதிமலை
மாதங்கம் பெற்றுவந்த மாதேவன் பெற்றவொரு
மாதங்கம் வந்தருளும் மன்.

### மலை

அன்னநடை மங்கையர்கள் அங்கைதிகழ் பைங்கிளியே
மன்னுதமி ழன்னை மலையுரையாய்—நன்மணமார்
சந்துலவும் வந்துலவுந் தண்ணூர் தமிழுலவும்
இந்துலவும் தென்பொதிய மே.

### நதி

செஞ்சொல் பயிலுஞ் செழும்பவள வாய்க்கிளியே
அஞ்சொல் அழகிதமிழ் ஆறுரையாய்-வெஞ்சமணர்
ஈட்டிக் கழுமுனையி லேறவெதி ரேறிவரும்
ஏட்டைச் சுமந்தவைகை யே.

### நாடு

இன்பமுறப் பேசும் இளங்கிளியே செந்தமிழ்த்தாய்
நன்மையுற்று வீற்றிருக்கும் நாடுரையாய்—மின்னலுடன்
மங்குறவழ் வேங்கடநல் வண்குமரி ஆயிடையோர்
தங்குதமிழ் நாடெனவே சாற்று.

### நகர்

செந்தார் மணிக்கிளியே செல்வத் தமிழரசி
நந்தாமல் வாழும் நகருரையாய்—இந்நாளில்
ஏர்வளருங் கூடலினும் இன்புறவே நாடுதமிழ்ச்
சீர்வளருஞ் சென்னையெனச் செப்பு.

### மாலை

வண்டணையும் பூஞ்சோலை வாழ்கிளியே வண்டமிழ்த்தாய்
கொண்டணியும் மாலையெது கூறிடுவாய்—தொண்டர்தம்
நாவாரப் போற்றி நலங்கனியப் பாடியநற்
றேவார மென்றே தெளி.

### குதிரை

ஏரார் பசுங்கிளியே எம்மன்னை தானூருஞ்
சீரார் குதிரையெது தேர்ந்துரையாய்—வாரார்
வரிபயிலும் பாணரிசை வாயிசைக்கும் பண்ணார்
பரிபாட லென்றே பகர்.

### யானை

தேனாருஞ் செந்தமிழ்தேர் செங்கிளியே செய்யதமிழ்
மானுலவு மானை மதித்துரையாய்—கானுயரும்
வானையுறு மாவினுயர் வண்டமிழ கங்களிற்றி
யானைநிரை யாதலறி யாய்?

### கொடி

தண்டுலவுஞ் சோலையிளந் தத்தாய் தமிழன்னை
கொண்டுலவுங் கோலக் கொடியுரையாய்—மண்ணுலகில்
பல்காப் பியரும் பயனுறவே நாடுமுயர்
தொல்காப் பியமெனவே சொல்.

### முரசு

வந்துதவழ் தண்டலையில் வந்துமகி ழார்கிளியே
முந்துதமிழ்த் தாயின் முரசறையாய்—செந்தமிழாற்
பாரதிரப் பாட்டிசைத்துப் பாராளச் செய்தபுகழ்
பாரதிபாட் டென்றே பகர்.

### செங்கோல்

வானர் பொழிலுறையும் வான்கிளியே ஆதிமொழித்
தேனர் தமிழரசி செங்கோலென்—ஞானமுடன்
எப்பா லவரும் எமதென்னும் வள்ளுவனர்
முப்பா லெனவே மொழி.



